



உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திர பரிபாலனம்


| தொகுதி உ | விஷு வருஷம் ஆடிமீ 1941 ஜுலாய் | பகுதி கக |
|---|---|---|


பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினீர் பயில்வலி வலமுறை யிறையே.

## விட்டுணு

## பிருகு சாபம் நீங்கப் பூசித்தது

முன்னைநாளில் அதிதியின் மைந்தர்களாகிய சுரரும் திதியின் மைந்தர்களாகிய அசுரரும் எண்ணற்ற வருடம் போர்செய்தார்கள். தேவர்கள் வலிமற்றனர். அப்பொழுது இலக்குமி நாயகராகிய விட்டுணுமூர்த்தி அவுணரோடு எதிர்த்தனர். அவுணர்கள் பயந்து ஓடிப் பிருகு முனிவருடைய பத்தினியும் இலக்குமியினது அன்னையுமாகிய கியாதி என்பவளிடத்தில் அடைக்கலம் புகுந்தனர். அவள் "அஞ்சன்மின்" என்று அபயங்கொடுத்து அவர்களைப் பாதுகாத்தனள். திருமால் சீற்றமிக்கவராய் அவுணரைக் காத்து ஆச்சிரமவாய்தலில் இருக்கும் தமது மாமியைச் சக்கரத்தினாற் கொன்று, அவுணரையுஞ் சங்கரித்துச் சென்றனர்.

தருப்பை, சமித்து முதலியவற்றுடன் ஆச்சிரமத்தை நோக்கி வந்த பிருகுமுனிவர் மனைவி இறந்துகிடப்பதைக் கண்டு, துயரின் மூழ்கி, விட்டுணுமூர்த்தியைக் கோபத்தோடு பார்த்து, "தருகனுளனுய் உனது மாமியைக் கொலைசெய்து விட்டினுய்; கொடிய பாவி! நீ உய்யுமாறு யாங்ஙனம்? இப் புன்றொழிலைச் செய்த நீ, இப் பூமியின் கண்ணே அளவற்ற பிறவியெடுத்து அநேக தீமைகளால் வருந்தி, உனது மனைவியை இழந்து துன்புறக்கடவாய்" என்று சாபமிட்டார். பின்பு சுக்கிராசாரியரால் உயிர் பெற்றெழுந்த தமது மனைவியுடன் கூடி உமாஸஹாயராகிய சிவபெருமானை வழுத்தித் தவத்தில் வீற்றிருந்தார்.

பிருகுமுனிவர் கூறிய சாபமானது விட்டுணுவை அணுகியது. அவர் இதற்குத் தீர்வு யாதெனை ஆராய்ந்து, "பிறையைத் திருமுடியில் அணிந்தருளிய பிரானுர் உளர். பஞ்சப்பிரம மந்திரங்களுமுள. யாமுமுள்ளேம்; இனி எமக்குக் குறையில்லை" என்று தேறிக் காஞ்சிபுரத்தை அடைந்து, சிவலிங்கத்திருமேனியைத் தாபித்துப் பூசித்தனர். பின்பு பரவப் பூசிய விபூதி தரித்த மேனியுடையராயும், திரிபுண்டரம் விளங்கும் நெற்றியுடையராயும், ஸ்ரீ ருத்திரமந்திரத்தைச் செபிக்கும் நாக்கையுடையராயும், நீர், கனி, காற்று, இலை என்னுமிவற்றை உண்டியாகக் கொண்டவராயும், பஞ்சப்பிரம மந்திரங்களைச் செபித்து, உள்ளக்கமலத்திற் பரமசிவனை இருத்தி, ஐந்தழல் மத்தியில் நின்று அருந்தவம் புரிந்தார். இன்னவாறு பல்லாண்டு திருமால் மாதவம் செய்த காலை, சிவபெருமான் அவர் பூசித்த லிங்கத்தினின்று, மாதொருபாகராய்த் தோற்றியருளி, "விட்டுணுவே! நீ விரும்பியவற்றைக் கூறுக" என்று திருவாய்மலர்ந்தார். விட்டுணு எட்டுறுப்புந் தோய நிலத்தில் விழுந்து வணங்கி எழுந்து, அட்டமூர்த்தியே போற்றி; எனது பாசக்கட்டை அறுத்தவரே போற்றி என்று தொழுது, "ஐயனே! அடியேன் தேவரீரைச் சரணமென்றடைந்தேன்; பிருகுமுனிவர் கூறிய சாபநோயினுக்கு அஞ்சினேன்; உய்யுமாறு அருள்

செய்யவேண்டும்" என்று வேண்டினர். "விட்டுணுவே! கேட்குதி; நமது அடியவர்கள் அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவை அவ்வப் பயனைப் பயந்தே விடுவதல்லது பழுதுறா; அன்பினாலே நீ நம்மை வழிபடும் பேற்றினாலே உனக்குப் பூமியிற் பத்துப் பிறப்புக்களுண் டாம்; இப் பத்துப் பிறப்புக்களுள் ஒன்றில் உனது மனை யாளை இழந்து வருந்தக்கடவாய்; பின் அவளைச் சேரக் கடவாய்; அப் பத்துப் பிறப்பும் லோகோபகாரமாகும்; மற்சம் முதலிய ஐந்து பிறப்புக்களில் தண்டமும், பரசு ராமர் முதலிய ஐந்து பிறப்புக்களில் அருளும் புரிவோம்" என்று திருவாய்மலர்ந்து சிவபெருமான் மறைந்தருளினர். திருமால் வணங்கி, "சுவாமீ! தேவரீரே தண்டத்தையும் அருளையும் யான்பெறச் செய்தால், அப் பெரும் பேற்றி னும் பேறு வேறுளதோ? இன்னுமோர் வரந் தந்தரு ளுக; இவ் விலிங்கத்தில் தேவரீர் எஞ்ஞான்றும் சாந்நித்தி யராய் எழுந்தருளியிருத்தல் வேண்டும்" என்று விண்ணப் பித்துத் திருமுன்னிலையில் நிற்க, சிவபெருமான் அவ்விதம் ஆகுக என்று மறைந்தருளினர்.

இச் சரித்திரத்தை உபதேசகாண்டத்தாலும் காஞ் சிப் புராணத்தாலும் அறியலாம். இதனை ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியசுவாமிகளும்,

சத்தார் பிருகு தனதில்லைத் தடிந்த வெல்லை
யித்தா ரணியி லளவில்பிறப் பெய்து கென்ன
வத்தா வருளென் றரிநோற்றுழி யையன் வந்து
பத்தாக வென்று நிறுவுற்றது பார்த்தி டாயோ.

என்னுஞ் செய்யுளால் (அகத்தியப் படலம் ௬.) அறி வுறுத்தியருளினர். "அரிபல பிறவி யானான்" எனச் சித்தியார் சுபக்ஷத்திற் சொல்லப்பட்டது.

சிவபெருமான் அருளிய பிரகாரம் விட்டுணு கொண்ட தசாவதாரங்கள்: மற்சம், கூர்மம், வராகம், நாரசிங்கம், வாமனர், பரசுராமர், பலராமர், தசரதராமர், கிருஷ்ணர், கற்கி என்பவைகளாம். தசாவதாரம் இவை என்பது,

மீனமை சேழனா சிங்கம்வா மனனுப் வென்றி
யானத விராமர்மூவ ராயனு யளித்தான் கற்கி
தானும் வருவ னின்ன மென்றவன் சாற்றித் தேவர்
கோனும் நிற்ப னென்று கூறுவன் குறிப்பி னேடே.

எனச் சிவஞானசித்தியார் பரபக்ஷம் பாஞ்சராத்திரி மறுதலையிற் கூறப்படுவதால் அறியலாம்.

ஸ்ரீமத் ஹரதத்தாசாரியசுவாமிகள் சுலோகபஞ்சசத்தில், "தசவித வபுஷா விஷ்ணுநா பூஜிதத்வாத்" (ஐயிரு பிறப்பினு மரியருச் சித்தலின்) எல்லாத் தேவர்களினும் உயர்ந்தவர் சிவபெருமானேயாமென்று கூறியதும் காண்க. இச் சரித்திரத்தினாலே, வழிபாட்டுக்குத் தக்க பலனைக் கொடுப்பவரும், பிறப்பிறப்பாதி உயிர்க்குணமில்லாதவரும் "பையஞ் சுடர்விடு நாகப்பள்ளி கொள்வா னுள்ளத்தானும்" எனத் தேவாரத்திற் கூறியபடி விட்டுணுவினது இருதயத்துள்ள பரமமூர்த்தியும் சிவபெருமானேயாமென்பது செவ்விதிற் றுணியப்படும்.

---

# திருவாலவாய்த் தேவார ஆராய்ச்சி

[சீரமயிலை சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை அவர்கள் எழுதியது.]

மதுரை விராட்புருடனுக்குத் துவாதசாந்தத்தானம். இங்கே எழுந்தருளியிருக்குஞ் சிவலிங்கம் மற்றத் தலங்களிலுள்ள சிவலிங்க மூர்த்திகள் தோன்று முன்னரே முளைத்தபடியால் "ஆதிலிங்கம்" என்றும் "மூலலிங்கம்" என்றும் கூறப்படும். "ஆலவாயி லுறையும் எம் ஆதியே" "ஆதியே ஆலவாயி லப்பனே அருள்செயாயே" "முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி" என்னுந் தேவார அடிகள் இத்தல மூர்த்தியின் தொன்மையைக் காட்டுவன. சிவபெருமானது "முன்னும் முதுபொருட்கும் முன்னும் முதுபொருட்டன்மை" இத்தல மூர்த்தியின் பெயரால் விளக்கப்பட்டவாறும்.

மதுரை சத்திபீடங்களில் ஒன்று. இதனைப் போலும் இத்தலத் தமிழ்ப்புராண ஆசிரியர் "சத்தியாய்ச் சிவமாய்" என்ற காப்புச் செய்யுளிலேயே சத்தியை முற்படக் கூறுகின்றனர். இத் தலசம்பந்தமான தேவாரங்களிலும் சத்தி மிகுதியாகப் போற்றப்படுகின்றது. "அங்கயற்கண்ணி தன்னொடு மமர்ந்த ஆலவாய்" "ஐயனூர் உமையோ டின்புறு

கின்ற ஆலவாய்" "உமையோ டாடித் திளைத்தானை" "உமையோ டேனுகி இருந்தான் தன்னை" என்னும் தேவார அடிகளைக் கூர்ந்து நோக்கவும்.

சிவபெருமான் பளிங்கு போன்றவர்; "மழபாடி வயிரத் தூணே" "மழபாடியுள் மாணிக்கமே" என்பவை தேவாரத்திலுள்ள சொற்றொடர்கள். உமாதேவியார் மரகதவல்லி; பச்சை நிறம் வாய்ந்தவர். யாதொன்று பற்றின் அது இயல்பாம் பளிங்கு தன் பக்கத்திலுள்ள மரகதத்தின் பச்சை நிறத்தையே பிரதிபிம்பிக்கும். அதாவது: சிவம் சத்தியால் இயக்கும்; சத்தியின்றிச் சிவமில்லை என்றவாறும். "சிவமெனும்பொருளு மாதிசத்தியொடு சேரினெத்தொழிலும் வல்லதாம் இவள்பிரித்திடி னியங்குதற்குமரி தரிதெனுமறை யிரக்குமால்" என்னுஞ் சௌந்தரியலகரிச் செய்யுள் இங்கே கவனிக்கற்பாலதாம். சிவத்திற்கும் சத்திக்குமுள்ள இத் தொடர்பைச் சம்பந்தப்பெருமான் "சுத்தமார் பளிங்கின் பெருமலையுடனே சுடர் மரகதம் அடுத்தாற்போல் அத்தனுர் உமையோ டின்புறுகின்ற ஆலவாய்"* என்று அழகுபட எடுத்துக் காட்டியிருக்கும் அருமை படித்தின்புறற்பாலது. இன்புறுதலாவது அபின்னமாதல். வகுத்துக்காட்டல் என்னும் உத்திக்கிணங்கச் சிவம் வேறு சத்திவேறு என்று பிரித்துக் காட்டியபடியாம்.

இத்தலத் தேவாரங்களில் மற்றொன்று நோக்கத்தக்கது. மதுரையிலே சைவத்தாபனஞ் செய்யப்பட்டமையால் இத்தலத் தேவாரப்பாக்களில் பல இடங்களிற் சிவபெருமான் "சைவனே" என்னுந் தூய நாமத்தால் அழைக்கப்படுகின்றனர். இக் காரணம் பற்றியே போலும் இத் தலபுராணமாகிய திருவிளையாடற்புராணத்திலும் தொட்ட தொட்ட இடமெல்லாம் சைவமணம் வீசுகின்றது. இது ஆக்கியோனது சைவப் பற்றைக் காட்டுகின்றது.

---

*"பண்ணுறு கிளிமொழிப் பாவைநின் திருமேனி
பாசொளி விரிப்பவந்தண்
பவளக் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய்ப்
பருமுத்த மரகதமதாய்த்
தண்ணுறு மல்லற் றுறைச்சிறை யனங்களி
தழைக்குங் கலாமஞ்ஞையாய்ச்
சகலமு நின்திருச் சொருபமென் றோவிடும்
சதுர்மறைப் பொருள் வெளியிட......"

என்னுங் குமரகுருபரர் வாக்கும் இங்கே சிந்திக்கத்தக்கது.

# விபூதி மகிமை

[கோத்தமங்கலம் சிவஸ்ரீ சோ. நடராஜக்குருக்கள் அவர்கள் எழுதியது.]

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளும் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே.

ஆனநீற் றுக்கவச மடையப் புகுமின்கள்
வானநா டான்வோரும் மாயப்படை வாராமே.

விபூதியென்பது திருநீறு. பஸ்மம், இரக்ஷை, நீறு, விபூதி ஸாரம், பஸிதம், கவசம், அல்லது காப்பு என்பன ஒருபொருட்கிளவியாம்.

சகல பாவங்களையும் நீற்றலால் நீறு எனவும், எந்த ஐஸ்வரியத்தைக் காட்டிலும் மேலான ஐஸ்வர்யமில்லையோ அப்படிப்பட்ட ஐஸ்வரியத்தைத் தருவதால் விபூதியென்றும், உயிர்களின் மலத்தைப் போக்குவதால் ஸாரமென்றும், அறியாமையாகிய இருள் நீங்க விளங்குதலால் பஸிதம் என்றும், பூதாதிகளைப் போக்கிக் காத்தலால் காப்பு அல்லது இரக்ஷையென்றும் கூறப்படும்.

ஜீவர்களின் ஜெனனமரணவடிவ வியாதியை நீக்கப் பவரோக வயித்தியநாதனுகிய பரமசிவன் திருநீற்றை ஔடதமாகவும், உருத்திராக்ஷத்தை மணியாகவும், பஞ்சாக்ஷரத்தை மந்திரமாகவும் அருளிச் செய்திருக்கின்றார் என்பது வேதாகமத் துணிபாம். ஆதலின், ஜெனன மரணவடிவ வியாதியினின்றும் நீங்க இச்சிக்கும் ஒவ்வொருவனும் ஔடதமாகிய விபூதியின் ஸ்வரூபம், திரவியம், வகைகள், பிரமாணம், தாரணவிதி, தரிக்கவேண்டிய இடங்கள், தரிக்கும்போது உச்சரிக்க வேண்டிய மந்திரம், ரேகைகள், சக்தி, தெய்வம், பலம் முதலிய விஷயங்களைச் செவ்வனே ஆராய்ந்துணர்தல் அத்தியாவசியமாம்.

விபூதிதேவரின் தியானம்

𑌤𑍍𑌰𑌿𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌉𑌗𑍍𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌂
[illegible]
[illegible]
[illegible]

மூன்று திருமுகமும், ஒன்பது கண்ணும், மூன்று கையும், மூன்று காலும், திருநடனக் கோலமும், சிவந்த திருமேனியும், உக்கிரவேடமும், விபூதி உத்தூளனமும் உடையவராகத் தியானம் செய்பவன் இஷ்டசித்தியைப் பெறுவானென்று மகுடாகமத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதென்க.

விபூதியின் வடிவம் அல்லது ஸ்வரூபம் பிரகாசமாம். இது ஸாதனம் ஸாத்தியம் என இருவகைப்படும். ஸாத்திய விபூதியின் ஸ்வரூபம் கேவலம் சச்சிதானந்தசிவமாம். ஸாதன விபூதியாவது சுருதிகளில் கேட்கப்படாத மந்திராதி ஸாதனங்களால் பசுவின் சாணத்தைச் சுட்டு அதில் நாசமற்று மிஞ்சியுள்ள சுத்தத் தெளிவான நீறும். இதுவே சிவவடிவமெனப் பாவித்து விதிப்படி தரிக்கின் சிவஸ்வரூபமாக உயிர்களைச் செய்விப்பதால் இதற்குச் சாதன விபூதியெனப் பெயரிடப்பட்டது.

விபூதியின் திரவியம் கோமயமாம். அசுத்தமாயும், வியாதியால் பீடிக்கப்படுவதாயும், அங்கவீனமுள்ளதாயும், அதிக அங்கமுடையதாயும் மலட்டுத்தன்மையுடையதாயுமுள்ள பசுக்களை நீக்கி, நல்ல அழகமைந்த பசுக்களின் சாணத்தை யெடுத்து உருட்டி யுலர்த்தி, வைதிகாக்கினியிலாவது சமையல் செய்யும் அக்கினியிலாவது தகித்து, வில்வக்கனி அளவுள்ள மட்பாத்திரத்தில் வைத்துக்கொண்டு, ஈசானுதி பஞ்சப்பிரம மந்திரம் ஜெபித்து வைத்துக்கொள்ளவும் எனப் போதாயன கல்பசூத்திரங் கூறுகின்றது.

விபூதியின் நிறமும், பயனும்

𑌕𑍃𑌷𑍍𑌣𑌂 𑌰𑍋𑌗𑌕𑌰𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌰𑌕𑍍𑌤𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌵𑌿𑌨𑌾𑌶𑌨𑌂 ।
𑌪𑍀𑌤𑌂 𑌸𑌂𑌪𑌦𑍍𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌸𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌧𑌕𑌮𑍍 ॥

கருநிற விபூதியைத் தரித்தால் நோயுண்டாகும். செந்நிற விபூதியைத் தரித்தால் கீர்த்தியைப் போக்கும். பொன்னிற விபூதியைத் தரித்தால் ஐஸ்வரியத்தை நீக்கும். வெண்ணிற விபூதியைத் தரித்தால் போகமோக்ஷம் இரண்டுங் உண்டாகும் என்று காமிகத்தில் சொல்லப்படுகிறது.

விபூதியை ஒவ்வொரு ஜீவனும் போகமோக்ஷங்களின் பொருட்டுத் தரிக்கவேண்டுமென்பதில் கோடிக்கணக்கான பிரமாணங்கள் உள. அவை பஸ்மஜாபாலம், காலாக்னிருத்ரம், நைத்திரீயம், ஸாங்க்யாயன குஹ்யம், போதாயனகல்பஸூத்ரம், வாஸுதேவோபநிஷத்து, ஸூத ஸம்ஹிதை, ஸ்காந்தம், ஆதித்தியபுராணம், மச்சபுராணம், கூர்மபுராணம், வராஹபுராணம், லிங்கபுராணம், மாநவபுராணம், மநுஸ்மிருதி, பராசரஸ்ம்ருதி, காமிகாகமம் முதலியனவாம். விரிவஞ்சி ஒவ்வொரு பிரமாணத்தையும் இங்கு விளக்காது விடுக்கப்பட்டது.

விருத்தம்

பொங்குமழன் முதலான புனிதமிகு பொருள்களினும் புனித மிக்க
தங்குலவு நீறதனை முத்திவிருப் பினர்விடா தணிய வேண்டும்
தவகுமுயி ரளித்தல்சுப நானம்வி தந்தானந் தவநல் யாக
மங்குதலின் மற்றுநீ றணிதலே யெனமறைகள் வகுக்கு மாலோ.

என்று சூதசங்கிதை கூறுவது இங்கு உணர்தற்பாற்று.

விபூதிதாரணம் இருவகையாம். அவை உத்தூளனம், திரிபுண்டரம் என்பனவாம். உத்தூளனமாவது:— எல்லா அங்கங்களிலும் விபூதியைப் பூசிக்கொள்வதாம். திரிபுண்டரமாவது:—விபூதியைச் சலத்தால் குழைத்து சிரம், நெற்றி, மார்பு முதலிய பதினாறு தானத்திலும் தரிப்பதாம்.

𑌭𑍂𑌤𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌿𑌕𑌰𑍀 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌜𑌨𑌨𑍀 𑌪𑌾𑌪𑍌𑌘𑌵𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌿𑌨𑍀
𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌦𑍍𑌰𑌵𑌨𑌾𑌶𑌿𑌨𑍀 𑌵𑌰𑌦𑌾 𑌸𑍌𑌭𑌾𑌗𑍍𑌯𑌸𑌂𑌵𑌰𑍍𑌧𑌿𑌨𑍀 ।
𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑍇𑌤𑌪𑌿𑌶𑌾𑌚𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌗𑌣𑌾𑌪𑌸𑍍𑌮𑌾𑌰𑌸𑌂𑌰𑌕𑍍𑌷𑌣𑍀
𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌕𑌰𑍀 𑌸𑌰𑍍𑌵𑌸𑌖𑌪𑍍𑌰𑌦𑌾 𑌭𑍂𑌤𑌿𑌸𑍍𑌸𑌦𑌾 𑌧𑌾𑌰𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 ॥

இது மகுடாகமத்தில் சொல்லியிருக்கிறது.

திரிபுண்டரமாவது நடுவிரல், சுட்டுவிரல், பெருவிரல் இம் மூன்று விரல்களால் விபூதியை எடுத்து ஜலஞ் சேர்த்துக் குழைத்து முற்கூறிய இடங்களில் வளையாமலும் இடையறாமலும் ஒன்றையொன்று ஒட்டாமலும் தரிப்பதாம். திரிபுண்டரம் என்றால் மூன்று ரேகைகள் என்று பொருள்படும். அவற்றின் விளக்கமாவது.

இவற்றில் முதலாவது ரேகையில் பிரணவத்தில் "அ"காரமும், குணத்தில் ராஜஸமும், சக்திகளில் கிரியாசக்தியும், தேவதைகளில் மஹாதேவரும், அக்கினியில் காருகபத்தியமும் இருப்பதாக வேதாகமங்கள் கூறுகின்றன. இரண்டாவது ரேகையில் "உ"காரமும், யஜுர் வேதமும், ஸத்துவகுணமும், இச்சாசத்தியும், மகேஶ்வரரும், தக்ஷிணாக்கினியும் இருப்பதாகவும் கூறுகின்றன. மூன்றாவது ரேகையில் "ம"காரமும், ஸாமவேதமும், தாமதகுணமும், ஞானசக்தியும், சிவமும், ஆஹவநீயமும் இருப்பதாகவும் கூறுகின்றன. ஆதலின், இங்ஙனம் விபூதி தரிக்கும்போது பாவிப்பது அத்தியாவசியமாம்.

விபூதியென்பது மேலான ஐஶ்வரியமாம்; அதாவது சிவஸ்வரூபமான பேரானந்தநிலையாம். இது (ஜீவ) பசுவாகிய ஜீவர்களின் மலமான அஞ்ஞான கர்மவாசத்தில் சித்திப்பதாம். கோமயபிண்டங்கள் ஜீவர்களாம். கோமயம் என்பது ஜீவர்களின் மலமாம். இதைச் சிவவடிவ அக்கினியிலிடுதல் ஸோஹம்பாவனையாகிய சிவயோகநிஷ்டையாம். இந் நிஷ்டையால் ஜீவனிடத்திலுள்ள உபாதிகள் நீங்க, பரமசிவத்தோடு இரண்டறக்கலத்தலாகிய பரமைஶ்வரியவடிவ விபூதி அதாவது நித்தியானந்தநிலை யுண்டாகின்றது. அல்லது மாயாகாரிய பிரபஞ்சவடிவ நாமரூபங்களை அகண்டாகார விருத்திவடிவத் தீயால் எரித்து மிஞ்சிய சச்சிதானந்தவடிவ பரமசிவ ஸ்வரூபமே விபூதியாம்.

இதன் திரண்ட பொருளாவது சகல பிரபஞ்சங்களும் முடிவில் நீறியும் சிவம் ஒன்று மாத்திரம் நீறுததாய் மிஞ்சுகின்றது. இங்ஙனம் மிஞ்சியதாயும் சுத்தமாயும் எல்லாவற்றின் முடிவான வீரியமாயும் ஸ்வப் பிரகாசமாயும் ஸகல ஜகத்திற்கும் அபின்னநிமித்தோபாதான விவர்த்த காரணமாயுமுள்ள பரமசிவத்தைக் குறிப்பாய் உணர்த்துவதே திருநீறும். ஆதலாற்றான் விபூதியைப் பரமசிவத்தின் லிங்கமென்று வேதாகமங்கள் கூறுகின்றன.

தேவாரம்

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் திருநீறே.

காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருவால வாயான் திருநீறே.

இங்ஙனம் தேவாரங் கூறுகின்றது இக்குணர்தற்பாலது. அன்றியும்,

பகர்புனித நீறணியார் ஞானமடை யார்கோடி பவமானுலுந்
தகர்தலுறூர் சமுசார மாபாவ முடையராய்த் தாழ்வார்கும்பி
புகரில்வரு ஞச்சிரம பலமுறு ரவரியற்றும் புனிதமான
கிகாரிய புண்ணியமும் பாதகமா மென்றுமறை நிகழ்த்துமாலோ.

பலபவப்பா வியருக்கே நீற்றில்வெறுப் புண்டாகும் பண்பார் நீற்றைக்
குலவவுவ வாரெல்லா மாபாவ ரெனத் தெரிந்து கொள்ளவேண்டும்
நலமுறிம்மான் மியஞ்சொலவெம் மாலுமற்றெம் முடையகுரு நாதனுலு
மலர்புகழீர் முடியுமோ முடியாதெக் காலத்தும் வாய்மையீதே.

என்று சூதசங்கிதை கூறுவதைச் சற்று யோசிக்கின், விபூதியைத் தரிக்காதவர் ஆத்மஸாட்சாத்காரத்தினை யடையாரென்றும், அவர்கள் என்றும் சமுசாரமாகிய "கும்பீபாக" நரகத்தில் ஆழ்ந்து வருந்துவரென்றும், அவர்களால் இயற்றப்படும் புண்ணியங்கள் யாவும் பாவமாய் முடியுமென்றும் தெள்ளிதாய்ப் புலப்படுகின்றது. ஆதலின், விபூதியை அலக்ஷியஞ் செய்தல் கூடாது.

"ஹ-ஞுஸைதூந வூலிதவூ॰" என்று யஜுர்வேதம் தைத்திரீயோபநிஷத்து மீங்குணர்தற்பாலதாம்.

இங்ஙனம் சுருக்கமாக விபூதியின் ஸ்வரூபம், திரவியம், வகைகள், பிரமாணம், தாரணவிதி முதலியன கூறப்பட்டன. இவற்றை நன்குணர்ந்து, ஸ்ரீ பரமேசுரனுடைய திருவடிவமென்று நினைத்து அவ்வழகிய விபூதியைக் கனவிலும் மறவாது தரித்தவரின் பஞ்சகிருத்திய வடிவமாய் உள்ள பரமேஸ்வரனைத் தரிசிக்கும் வாயிலாக நித்தியானந்தப் பெருவாழ்வை யடைவரென்பது திண்ணம். பவரோயை நீக்க வல்ல மருந்து இதைக்காட்டிலும் மற்றொன்று இல்லை என்பது இதனால் நன்கு புலனாகும்.

---

# தீபோற்சவ வினாவுக்கு விடை

[மானாமதுரை ஸ்ரீமான் D. கைலாசநாதன் அவர்கள் எழுதியது]

சென்ற விக்கிரமவருஷம் கார்த்திகைமாதம் 27-ந் தேதி வியாழக்கிழமையன்று சிவாலயங்களில் தீபோற்சவம் நடத்தியது ஆகமசாஸ்த்ரவிரோதமென்றும் இதற்குச் சரியான ஆதாரம் எழுதும்படிக்கும் திருவுத்தரகோசமங்கை M. நடராஜக் குருக்களும், பரமக்குடி சிவ. நாராயணபட்டரும் 15-12-40 தேதி எழுதிச் சைவசாஸ்த்ர பரிபாலனம் தொகுதி 2. பகுதி 7-ல் தெரியப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள்.

சென்ற கார்த்திகைமாதம் 27-ந் தேதி வியாழக்கிழமை நடத்திய தீபோற்சவமானது சாஸ்த்ரவிதிப்படி நடந்ததே தவிர சாஸ்த்ரவிரோதமாக மாட்டாது. அடியிற் கண்ட வசனப்படி கார்த்திகையில் செய்வதுதான் உத்தமம்.

உத்தரகாரணாகமத்தில்,

ஸூர்யாஸ்தநாத் பூர்வம் த்ரிமுஹூர்த்தம் விசேஷத: |
கடிகா ஷட்விம்சத்யாபி த்ரிமுஹூர்த்தகே ||

சூரியாஸ்தமனத்திற்கு முன்பு மூன்று முகூர்த்தநேரம் (அதாவது சூரியோதயத்திற்குப் பிறகு இருபத்துநான்கு நாழிகைக்கு மேல் ஆறு நாழிகை) கிருத்திகை பூரணையோடு கூடியிருந்தால் உத்தமம் என்றும், நான்கு நாழிகை இருந்தால் மத்திமம் என்றும், இரண்டு நாழிகை இருந்தால் அதமம் என்றும் கூறப்படுகிறது.

வவ-ியா-க்ஷம் விஶேஷேண உத்தமம் வரிகீர்த்திதம் ।
வவ-ியா-க்ஷம் விஹீநேது நக்ஷத்ரம் ப்ரஶஸ்யதே ॥

முற்கூறியபடி பூரணையோடு கார்த்திகையிருந்தால் உத்தமம் என்றும் முற்கூறிய பூரணையில்லாவிட்டால் நக்ஷத்திரந் தான் பிரதானம் என்றும் கூறுகிறது.

வவ-ிஷு ரோஹிணியா-க்ஷம் ஹரணீ ஸஹிதஞ்சவா ।
தஸ்மிந் ஶாஸவ-ஜாஷ ப்ராணஹீநஸ்ஶரீரவத் ॥

பூரணையோடு கூடிய ரோஹிணியிலாவது பரணியிலாவது தீபோற்சவத்தை நடத்தினல் பிராணன் இல்லாத சரீரத்திற்கு அதாவது, சவத்திற்குச் செய்த பூஜைக்குச் சமமாகும் என்று கூறுவதாலும், சுப்பிரபேதாகமத்தில்,

கயா தஸ்ஸம்ப்ரவக்ஷ்யாமி க்ருத்திகாதீபநிர்ணயம் (லக்ஷணம்) ।
கார்த்திகே க்ருத்திகாயாந்து தீபகர்மஸமாசரேத் ॥

கார்த்திகை தீபநிர்ணயத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். கார்த்திகைமாதக் கார்த்திகைநக்ஷத்திரத்தில் தீபகர்மாவைச் செய்யவேண்டும் என்று கூறுவதாலும், காமிகாகமத்தில்,

தீபாரோஹம் ப்ரவக்ஷ்யாமி ஶ்ருணுஷ்வம் த்விஜஸத்தமா: ।
மாஸேது க்ருத்திகாயுக்தே நக்ஷத்ரே க்ருத்திகாஹ்வயே ।

கார்த்திகைமாதக் கிருத்திகாநக்ஷத்திரத்தில் தீபோற்சவத்தைச் செய்யவேண்டும் என்பதாலும்,

திதிப்ராதாந்யம் ஸர்வத்ர கந்யாத்ருக்ஷப்ரதாநக: ।

என்று குமாரதந்திரத்தில் சொல்லியிருப்பதாலும் நக்ஷத்திரத்தில் செய்வதுதான் உத்தமம்.

மேலும், எந்த ஆலயமானது எந்த ஆகமத்தைக்கொண்டு பூஜை நடந்துவருகிறதோ அந்த ஆகமப்படி பூஜை செய்வது தான் சாஸ்த்ரசம்மதமாகும். பர்வத்தைப் பிரதானமாக வைத்துச் சில ஆலயங்களிலும், நக்ஷத்திரத்தைப் பிரதானமாக

வைத்துச் சில ஆலயங்களிலும் நடக்கிறது. பர்வத்திலும் நக்ஷத்திரத்திலும் நடத்துவது சாஸ்திரவிரோதமென்று சொல்லவும் கூடாது. நினைக்கவும் கூடாது. மதுரை, திருவண்ணாமலை, திருப்பரங்குன்றம், திருப்புவனம் முதலிய இடங்களில் எல்லாம் நக்ஷத்திரத்தைப் பிரதானமாகக் கொண்டு நடக்கிறது. திருவுத்தரகோசமங்கை, காளையார்கோவில் முதலிய க்ஷேத்திரங்களில் எல்லாம் பர்வத்தைப் பிரதானமாகக் கொண்டு நடக்கிறது. ஆகையால், அந்தந்த ஸ்தலங்களில் நடந்துவருகிற ஆகமப்படி நடத்துகிறார்களே தவிர, ஆகமத்தில் சொல்லாததை நடத்தவில்லை.

மேலும், ஸ்வாயம்புவாதி லிங்கங்களுக்கு இன்ன ஆகமப்படி பூஜை செய்யவேண்டுமென்று சுப்ரபேதாகமத்தில் கூறுவதால் அதன்படி செய்வதுதான் சாஸ்த்ரசம்மதமாகும். ஸ்வாயம்புவாதி லிங்கங்கள் ஏழுவிதமென்று கூறப்படுகின்றது. அதாவது:

𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍁 𑌦𑍈𑌵𑌿𑌕𑌞𑍍𑌚𑍈𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌨𑍁𑌷 𑌮𑌾𑌰𑍍𑌷𑌕𑌂।
𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌬𑌾𑌣𑌲𑌿𑌂𑌗𑌞𑍍𑌚 𑌸𑌪𑍍𑌤𑍈𑌤𑍇 𑌲𑌿𑌂𑌗𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥

(1) ஸ்வயம்புலிங்கம், (2) தேவிகலிங்கம், (3) திவ்யலிங்கம், (4) ஆர்ஷலிங்கம், (5) மாநுஷலிங்கம், (6) ராக்ஷஸலிங்கம், (7) பாணலிங்கம் என்று லிங்கங்கள் ஏழுவகைப்படும்.

𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑍁𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌦𑍇𑌵𑍍𑌯𑌾 [illegible] 𑌦𑍈𑌵𑌿𑌕𑌮𑍍।
𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑍇𑌵𑌾𑌰𑍍𑌚𑌿𑌤𑌞𑍍𑌚𑍈𑌵 𑌋𑌷𑌿𑌭𑌿𑌃 𑌪𑍂𑌜𑌿𑌤𑌮𑌾𑌰𑍍𑌷𑌕𑌮𑍍॥

𑌮𑌾𑌨𑍁𑌷𑍈𑌃 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌂 𑌲𑌿𑌂𑌗𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍।
𑌅𑌸𑍁𑌰𑍈𑌰𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍈𑌶𑍍𑌚𑍈𑌵 𑌪𑍂𑌜𑍍𑌯𑌮𑌾𑌸𑍁𑌰𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍॥

𑌬𑌾𑌣𑌨𑌾𑌮𑌜𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑌜𑍍𑌜𑌾𑌤𑌂 𑌬𑌾𑌣𑌲𑌿𑌂𑌗𑌕𑌮𑍍।
𑌬𑌾𑌣𑍇𑌨 𑌪𑍂𑌜𑌿𑌤𑌂 𑌲𑌿𑌂𑌗𑌂 𑌬𑌾𑌣𑌲𑌿𑌂𑌗𑌮𑌿𑌹𑍋𑌚𑍍𑌯𑌤𑍇।

ஸ்வயமாக உண்டான லிங்கம் சுயம்புலிங்கமென்றும், தேவியினால் ஸ்தாபிக்கப்பட்டது தேவிகலிங்கமென்றும், தேவர்களால் பூஜிக்கப்பட்டது திவ்யலிங்கமென்றும், ரிஷிகளால் பூஜிக்கப்பட்டது ஆர்ஷலிங்கம் என்றும், மனிதர்களால் ஸ்தாபிக்கப்பட்டது மாநுஷலிங்கம் என்றும், அசுரர்களாலும்

ராக்ஷசர்களாலும் பூஜிக்கப்பட்டது ராக்ஷசலிங்கம் என்றும், பாணனால் பூஜிக்கப்பட்டதும், ஜலத்தில் உண்டானதும் வாண லிங்கம் என்றும் லிங்கோற்பத்தியைக் கூறுகிறது.

இந்தவிதமான ஏழு லிங்கங்கள் பரார்த்தாலயங்களில் பூஜிக்கத்தகுந்தவை.

காரணம் வாதுலஞ்சைவ ஸூக்ஷ்மஞ்ச ஸுப்ரபேதகம்।
ஸ்வயம்புவம் லிங்கம் ஏதேஷு பூஜிதம் க்ரமாத்॥

சுயம்புலிங்கத்தை, காரணாகமம், வாதுளாகமம், சூக்ஷ்மாகமம், ஸுப்ரபேதாகமம் இந்த நான்கு ஆகமவிதிப்படி பூஜிக்க வேண்டும்.

காமிகம் விஜயஞ்சைவ ஸ்வாயம்புவமதானலம்।
பூஜயேத்தைவிகே லிங்கே கல்பயேத் கல்பவித்தம:॥

தேவிகலிங்கத்தை, காமிகாகமம், விஜயாகமம், அனலாகமம், ஸ்வாயம்புவாகமங்களின்படி பூஜை நடத்தவேண்டும்.

சிந்த்யஞ்சைவ ஸஹஸ்ரஞ்ச தீப்தஞ்சாப்யஜிதம் ததா।
திவ்யலிங்கார்ச்சநே ப்ரோக்தம் ஸர்வகாமார்த்தஸாதகம்॥

சிந்த்யாகமம், ஸஹஸ்ராகமம், தீப்தாகமம், அஜிதாகமம் இந்த நான்கு ஆகமவிதிப்படி திவ்யலிங்கத்தைப் பூஜிக்க வேண்டும்.

யோகஜம் முகுடஞ்சைவ நிஸ்வாஸம் ரௌரவம் ததா।
ஆர்ஷலிங்கம் பூஜயேத்தேஷு ஸம்யகேவ விசேஷத:॥

ஆர்ஷலிங்கத்தை, யோகஜாகம், மகுடம், நிஸ்வாஸம், ரௌரவாகமங்களின்படியும்,

வீரஞ்ச விமலஞ்சைவ சந்த்ரஜ்ஞானஞ்ச பிம்பகம்।
பூஜயேத் மானுஷஞ்சைவ மானுஷே தேசிகோத்தம:॥

மானுஷலிங்கத்தை, வீரம், விமலம், சந்த்ரஜ்ஞானம், பிம்பாகமங்களின்படியும்,

𑌪𑍍𑌰𑍋𑌦𑍍𑌗𑍀𑌤𑌂 𑌲𑌲𑌿𑌤𑌂𑌚𑍈𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌸𑌨𑍍𑌤𑌾𑌨𑌮𑍇𑌵 𑌚।
𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍇 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌯𑍇 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌜𑍍𑌞 𑌪𑍍𑌰𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍॥

ப்ரோத்கீதம், லலிதம், சித்தாகமம், சந்தானம் இந்த ஆகமங்களின்படி ராக்ஷஸலிங்கத்தைப் பூஜை செய்யவேண்டும் என்றும்,

𑌪𑌾𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌅𑌂𑌶𑍁𑌮𑌾𑌨𑍍𑌕𑌿𑌰𑌣𑌂 𑌤𑌥𑌾।
𑌬𑌾𑌣𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌰𑍍𑌚𑌨𑌂𑌚𑍈𑌵 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌵𑌚𑍍𑌚 𑌪𑍍𑌰𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍॥

பாணலிங்கத்தை, பாரமேஸ்வரம், சர்வோக்தம், அம்சுமான், கிரணாகமங்களின் விதிப்படி பூஜை செய்யவேண்டும் என்றும் சுப்ரபேதாகமத்தில் சொல்லப்படுகிறது. எந்தெந்த இடத்தில் எந்தெந்த லிங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதோ அந்த லிங்கத்திற்கேற்பட்ட ஆகமப்படியே நடத்தவேண்டும். அந்த லிங்கத்திற்கேற்பட்ட ஆகமப்படி நடத்தாமல் வேறு ஆகமப்படி நடத்தினால் தந்த்ரசங்கரதோஷத்திற்குட்பட்டதாகும். எப்படியெனில்,

𑌕𑌰𑍍𑌷𑌣𑌾𑌦𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑍍𑌤𑌮𑍇𑌕𑍇𑌨 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍।
𑌭𑍁𑌕𑍍𑌤𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌦𑌂 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌭𑌵𑍇𑌨𑍍𑌨𑍃𑌣𑌾𑌮𑍍॥

கர்ஷணாதிபிரதிஷ்டை வரையில் ஒரே ஆகமப்படி நடத்தவேண்டும். அதனால் சமஸ்த ஐஸ்வர்யங்களையும் மோக்ஷப்பிராப்தியையும் கொடுக்கிறது.

𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌕𑍇𑌨 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌪𑌶𑍍𑌚𑌾𑌦𑌨𑍍𑌯𑍇𑌨 𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑌃।
𑌤𑌤𑍍𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑌙𑍍𑌕𑌰𑍇𑌣 𑌰𑌾𑌜𑌾 𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌦𑍋𑌷𑌕𑍃𑌤𑍍।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌚 𑌨𑌾𑌶𑌨𑌂 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿।

முதலில் ஒரு ஆகமப்படி பூஜை செய்த பின்பு வேறு ஆகமப்படி பூஜை செய்தால் ஸங்கரதோஷம் எற்படும். மேலும், அரசர்களுக்கும், ராஜ்யத்திற்கும், ஆசாரியருக்கும், கர்த்தாவுக்கும் நாசம் எற்படும்.

𑌯𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌯𑌦𑌾𑌰𑌬𑍍𑌧𑌂𑌤𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣𑍈𑌵 𑌤𑌤𑍍𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍।
𑌕𑍃𑌤𑌞𑍍𑌚𑍇𑌦𑌨𑍍𑌯𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌤𑌂𑌤𑍍𑌰𑌦𑍋𑌷𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌤𑍇।

எந்தச் சாஸ்திரத்தைக் கொண்டு ஆரம்பிக்கிறோமோ அந்தச் சாஸ்திரப்படியே நடத்தவேண்டும். வேறு சாஸ்திரப்படி செய்தால் அந்தச் சாஸ்திரத்திற்கும் தோஷம் ஏற்படும்.

எங்கெந்தச் சிவாலயங்களில் எங்கெந்த ஆகமசாஸ்திரப் படி பூஜை நடந்துவருகிறதோ அந்தந்த ஆகமத்தில் சொல்லிய வாறே நடத்துவதே உத்தமமாகும். ஆகையால், மேலே சொன்ன காரணங்களினால் கார்த்திகைமீ 27உ நடத்திய தீபோற்சவம் சாஸ்திரசம்மதமேயாகும்.

---

# திருவள்ளுவரும் கச்சியப்பசிவாசாரியரும்

[அச்சுவேலி, சிவஸ்ரீ ச. கு. வைத்தியேசுவரக்குருக்கள் அவர்கள்]

ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் தமக்கு முன்னிருந்த அருட்புலவர்கள் அருளிய திருக்குறள், திருமுருகாற்றுப் படை முதலிய திருவாக்குகளைப் போற்றி அவற்றின் சொல்லை யும் பொருளையும் கந்தபுராணத்தில் அழகுபெற வைத்திருக் கும் அமைதியின் சிறப்பு நோக்கி உணர்ந்துகொள்ளற்பால தொன்றும். சிவாசாரியசுவாமிகள் திருக்குறளின் சொல்லையும் பொருளையும் அநேக இடங்களில் அழகுபெற அமைத்திருக் கின்றார்கள்.

மேனவியல் பால்வரைப் மெல்லியலை மேவிற்
றூனமுள தாகுமரி தானதவ மாகும்
வானமுள தாகுமிவண் மண்ணுமுள தாகு
மூனமில தாமரிய தொன்றுமில யன்றே.

—கந்தபுராணம்: மார்க்கண்டேய-சகூ.

இச் செய்யுளிலே,

இல்லதெ னில்லவண் மாண்பானு லுள்ளதெ
னில்லவள் மாணக் கடை.

என்னும் திருக்குறட்பாக் கருத்துப் பொலிவுறுதல் காணலாம்.

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

என்னுங் குறட்பாவின் கருத்து,

காண்டகைய தங்கணவ ரைக்கடவு ளார்போல்
வேண்டலுற கற்பினர்த மெய்யுரையி னிற்கு
மீண்டையுள தெய்வதமு மாமுகிலு மென்றால்

—மார்க்கண்டேய-௪எ.

என்ற விருத்தத்தில் பொலிகின்றது.

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்செங்
கோனோக்கி நிற்குங் குடி.

என்னும் உத்தரவேதப் பொருளும் சொல்லும்,

வானோக்கி நிற்குமுல கென்னவு மன்னவன்செங்
கோனோக்கி நிற்குங் குடியென்னவும்...

—திருநகரப் படலம்-௪உ.

என்ற திருவிருத்தத்திலே காண்கின்றோம்.

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

என்னுந் திருக்குறட்பாக் கருத்து,

மன்னவர் செவியழன் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவ ரமைச்சர்க டுணைவர் மேலையோ
ரொன்னலர் விழைந்தவா றுரைக்கின் றார்களே.

—மந்திரவமைச்சியல்-௧உ.

என்ற செய்யுளினும்,

ஒற்றொற்றித் தந்த பொருளை மற்றுமோ
ரொற்றினு லொற்றிக் கொளல்.

என்னுங் குறட் கருத்து,

ஒற்றரைத் தூண்டி யன்னோ ருறுவலி யுணர்வ ரேனு
மற்றுமோ ரொற்றி னல்லா லன்னது மனத்துட் கொள்ளார்.

—அசுரேந்திரன் மகேந்திரஞ் செல்-கூ.

என்பதிலுங் கண்டுகொள்க.

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

என்னுங் குறட்பாவின் பொருளை,

திரைகொள் வேலைபோ னிறைதரு கோட்டகஞ் சிறிதோர்
கரையி லாவழி யுடைந்திடு மன்னது கடுப்பப்
பொருதி றற்படை பலவுள வெனினும் போற்று
மரச ரில்வழி நின்றிடா தன்னவை யழியும்.

—இரண்டாநாட் சூரன்-கூ.

என்னும் விருத்தப்பா விரிவுரை செய்து காட்டுகின்றது.

உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

என்னுந் திருக்குறளின் சொல்லும் பொருளும்,

உருவுகண் டெள்ளா தாற்ற லுணர்வதே யுணர்ச்சி யென்றான்.

—மூன்றாநாட் பானுகோபன்-கூ.

என்னும் பாட்டிலும்,

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். —வாய்மை

என்னும் குறட் கருத்து,

புன்மொழி லாகிய பொய்யும் வாய்மையா—மென்றனர்......

—இந்திரபுரி-எ.

என்னுஞ் செய்யுட்பாகத்திலும்,

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகர்க்கு.

—செய்ந்நன்றியறிதல்-௰.

என்ற குறட் கருத்து,

ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனங்
கன்றிட வொருவினைக் கருதிச் செய்வரேற்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ.

என்ற செய்யுளிலும் நன்கு காணத்தக்கன.

தெய்வயானை திருமணப் படலத்திலே ௧௭அ-ம் கவியிலே, வரும் உத்தி வலம்புரி மகரப்பகுவாய் என்பன திருமுருகாற்றுப்படைச் சொற்கள். பொருநராற்றுப்படையில் வரும் காடி என்னும் பதம் "காடி யிழந்து கவந்தமதாய்" எனப் புராணத்திலும் வருகிறது. காடி - கழுத்து.

வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்தும்

எனப் பொருநராற்றுப்படையும்,

"வார்தல் வடித்த லுந்த லுறழ்தல்—சிருட னுருட்ட றெருட்ட லள்ள
லேருடைப் பட்டடை யெனவெட் டுவகை—யின்னிசைக் காணத்து".

எனச் சிலப்பதிகாரமும் கூற,

வாரியும் வடித்துந்தியும் வரிசையா லுறழ்ந்துஞ்
சீரியாழ் வல்ல நாரதன்...... —வள்ளியம்மை திருமணம்.

எனச் சிவாசாரியரும் கூறுவது காண்க.

பழமொழி நானூற்றில்,

தன்மேல் நலியம் பசிபெரி தாயினும்
புன்மேயா தாகும் புலி.

என வருவதன் கருத்தை யுள்வைத்து,

"புலியது பசியுறிற் புல்லுந் துய்க்குமே" (வள்ளி—௬௧.)

என்றருளினர்.

முன்பகல் கண்டான் பிறன்கேடு தன்கேடு
பின்பகல் கண்டு விடும்.

என்று கூறிற்று பழமொழி நானூறு;

முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது
பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே.

என்றது கந்தபுராணம்.

"பனியாற் குள நிறைதலில்" (பழமொழி)

என்னும் பாவின் விரிவுரையாக,

"வாவியுங் குளனும் பொய்நீர் நதிகளு மற்று மெல்லாந்
தூவுநுண் பனியா லன்றே துளும்புவ"

—அக்கினிமுகன்—கஅ௬.

என்னும் பாட்டு வருகிறது.

இங்ஙனம் திருக்குறளினும் ஏனைப் பழைய நூல்களினும் உள்ள சொல்லையும் பொருளையுந் தாங்கி வரும் செய்யுட்கள் பலவுள்ளன. "அறிஞர்கள் நாடியே யவற்றைக் காண்கவே."

---

# சிவாலயப் பணி

[சேலம், துகை சிவஸ்ரீ S. A. சுகவனநாதக்குருக்கள் அவர்கள்]

"ஆலயந் தொழுவது சாலவு நன்று" என முதியோர் கூறினர். நம் முன்னோர்கள் நிஷ்காமியப்பணியை வளர்க்குந் தெய்வவழி பாட்டை மூர்த்திவழிபாகவும், தலவழியாகவும், தீர்த்தவழிபாகவும் அனுட்டித்துவந்தனர். லௌகிகத்தொழில் செய்பவர் சர்வாந்தரியாமியாய் எங்கும் நிறைந்த சிவபெருமானை மனம் வாக்குக் காயங்களால் வழிபடவேண்டிய அவகாசம் பெறமாட்டாத காரணம் பற்றியே ஆலயவழிபாடு ஏற்பட்டிருக்கிறது. உலகமாயையில் உழன்று திரியும் மானிடர்க்கு ஆலயசேவை மிக ஆவசியகமாகும். இச் சிவவழிபாடு தற்காலம் நாகரீகம் பெற்றிருக்கும் மாந்தர்களால் ஈனஸ்திதியை அடைந்திருக்கிறது. அதற்குக் காரணம் ஆலயங்களில் தருமகர்த்தாக்களாக நியமிக்கப்பட்டிருப்பவர் சமயப்பற்று சிவபக்தி இல்லாததே. தகுதியாக நியமிக்கப்பட்டிருந்

தால் அடிக்கடி மாற்றி வேறொருவரை நியமிப்பது மூடத்தனமேயாகும். அதுவுமன்றி, நாகரிகம் பொருந்திய நமது நாட்டு அன்பர்களின் படிப்பின்மையும் அதற்கு முதற்காரணமாக இருக்கின்றது.

ஆலயசேவையானது மனம் பலவிடத்திற் செல்லாமற் காக்கும். எவ்விடத்தில் நிலையாத மனமும் ஆலயத்தில் நிலைத்துவிடும். எல்லாக் காரியங்களையுஞ் செய்யலாம்; மனதை அடக்குவதென்றால் மிக அரிது. இதுபற்றியே நமது தாயுமானவரும் "சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது" எனக் கூறியுள்ளார். அஞ்ஞானமாகிய பாசத்தினின்று நீங்கி மெய்ஞ்ஞானத்தை அடைவதற்குச் சிவதரிசனமே மேன்மையான வழியாகின்றது. ஆலயவழிபாடு செய்யும் மெய்யன்பர்கள் நாடோறும் ஆலயத்துக்குச் செல்லுங்காலை உள்ளத்தில் கடவுளின் உருவமே குடிகொண்டிருக்கவேண்டும். வேறு விஷயங்களில் மனதைச் செல்லவிடலாகாது. இதுபற்றியே ஆலயத்துக்குச் செல்லும்போது வேறுபேச்சுப் பேசாமலும், பிறிதொன்றை எண்ணாமலும் செல்லவேண்டுமெனச் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கிறது. மந்திரங்களுக்கெல்லாம் மேலானதும் ஸ்ரீ பரமேசுரனின் திருமேனியாக விளங்குவதுமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு செல்வதினால் மனம் வேறுவழியிற் செல்லாது.

இனி, நமது அன்பர்கள் ஆலயப்பணி செய்வதற்குப் பொருளில்லையென வருந்தக்கூடும். வருத்தமடையவேண்டியதில்லை. பொருள்உள்ளவர் பொருளைக் கொண்டு செய்யலாம். பொருளில்லாதவராகிய ஏனையோர் ஆலயமடைந்து அலகிடல், மெழுகல், சிவசம்பந்தமாகச் சித்திரம் வரைதல், புஷ்பவகையெடுத்தல், வில்வமெடுத்தல் முதலிய பணிகளையாகினும் கட்டாயம் செய்யவேண்டும். இவ்விதப் பணிகளால் அன்புமேலிட்டு அந்தப் பரமேசுரனிடம் அவர்கள் மனம் லயமடைகிறது. பத்திரங்களுக்கெல்லாம் மேலானதாயுள்ள வில்வப்பத்திரமானது இச்சா ஞானக் கிரியா சத்தி சொரூபமாய் உள்ளதுப் மும்மூர்த்திகளின் வடிவமைந்ததுமாம். மூக்காலத்திலும் வில்வத்தை நீரில் கழுவி மறுபடியும் சிவனுக்குச் சாத்தலாமென்று நூல்கள் கூறும்.

புரகர னிச்சா ஞானக் கிரியையாய்ப் போந்த வில்வ
மாமுத லடைந்து மூன்று வைகலூ ணுறக்க மின்றி
அரகர முழக்கஞ் செய்வோ ரைம்பெரும் பாத கங்கள்
விரகில்செய் கொலைக ளுரு மாதலால் விசேடம் வில்வம்.

எனத் திருவிளையாடற்புராணமும் கூறுமாற்றால் தெளிக. இவ்வித பணிகளால் சிவபெருமானின் அன்பு வடிவத்தைக் கண்டின்புறும் தன்மையை அடைகிறார்கள்.

ஆலயம் சைவாசாரமுள்ளது. சைவர்களுக்குப் பொதுவாய் அமைந்தது. அவ்விடத்தில் கவலை நீங்கிச் சுகமடையலாம். ஆலயவழிபாட்டில் முதலாவது கோபுரதரிசனம். அது ஸ்தூலலிங்கமென்று சொல்லப்படுகிறது. சிவாலயத்தில் கடவுளின் தன்மையை ஸ்தூலமாய் யாவரும் அறிந்துகொள்ளும் பொருட்டுக் கோபுரமாகிய ஸ்தூலலிங்கத்தில் அவருடைய பராக்கிரம லீலாவிநோதங்களும் அவரது அதிகாரம் பெற்ற பிரமா, விட்டுணு, இந்திரன், வித்தியேசுரர், திக்குப்பாலகர், தசாயுதம் முதலிய உருவங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. சிவமூர்த்தியைத் தவிர மற்றைத் தேவர்களை வணங்குவது அதிகபலன் தராதென அநேக சாத்திரங்களில் உரைக்கப்படுகிறதினால் பரமேசுவரனை வழிபடுதல்வேண்டும். சிவபெருமானையன்றி வேறு வணக்கம் அலைகடல் புரளினும் அடாது. இதனை நமது ஸ்ரீ வாகீசப்பெருந்தகையாரும்,

நாமார்க்குங் குடியல்லோ நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.

சிவபெருமானுடைய திருக்கோயிலைத் தரிசிக்குங் கண்களே கண்கள். எம்பெருமானுடைய கோயிலைப் பிரதக்ஷிணம் செய்யும் கால்களே கால்கள். பெண்ணொரு பாகனைப் பணியும் தலைகளே தலைகள். பரமசிவனைப் பூசிக்குங் கைகளே கைகள். இதுபற்றியே,

கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நன்னாவே நன்னா
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிகள்
அண்ணல்போலங் கழனிணைக்கு நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை.

எனப் பிரமோத்தரகாண்டத்திற் கூறப்பட்டுள்ளது

உலக சிருட்டியாதி கிருத்தியங்களைச் செய்கிறாரென்பதை சபாபதி மூர்த்தத்தால் அறிகின்றோம். இப்படியே ஒவ்வோர் மூர்த்தமும் உண்மையை விளக்குகின்றன. அம்மூர்த்தங்களை வழிபடுவதன் நோக்கம் மனதை அன்பிற்றோய விடுத்துப் பேரின்பமுறுதலேயாம். உயரிய சிறைத்தரும் சிவதரிசனத்தைச் செய்யாது வீண்காலங் கழிப்போரும் துவேஷித்துப் புறக்கணிப்போரும் மரணமென்னுந் துன்பத்திற் காளாகவேண்டிய வரேயாவர். (தொடரும்)

---

## உத்ஸவம்

[நாககிரிவாசி தி. நா. பண்டித ஸ்ரீ அர்த்தநாரீசுவரக்குருக்கள் அவர்கள்]

இந்த சேலம் ஜில்லாவினுள் சமயாசாரியர்களால் பாடல் பெற்ற சிவஸ்தலம் திருக்கொடிமாடச்செங்குன்றூர் என்னும் திருச்செங்கோடு ஒன்றே அருமையினும் அருமையாக விளங்குகின்றது. இத் தலத்தில் பிரதான மூர்த்தி அர்த்தநாரீசுரர் இக் கடவுளுக்கும் ஸ்ரீ செங்கோட்டு வேலவருக்கும் வைகாசி விசாகத்தில் திவ்ய மகோற்சவம் நடைபெறும். இம் மஹோத்சவ தரிசனத்துக்குப் பல நாடுகளிலும் நகரங்களிலும் இருந்து அன்பர்கள் வருகின்றனர். அந்த அடியார்கள் அம்மை அப்பரை நேத்திரானந்தமாகத் தரிசித்து இன்புறுகின்றார்கள். இதிற் குறைவு எவ்வகையிலும் நேரிடுவதில்லை. ஆனால் சுரோத்திரானந்தமாகக் கேட்பதற்குச் சமய உணர்ச்சி பயக்கத்தக்க சைவசமயப் பிரசங்கங்கள் நடப்பதாக எமது அநுபவத்துக்கு எட்டவில்லை என்றுமாத்திரம் அறிவிக்க விசனமேலிடுகின்றது. இத்தேவஸ்தான பரிபாலகர்கள் சாமானியர்

கள் அல்ல. ஜமீந்தார்கள், பி. ஏ. வக்கீல்கள், மிராசுதார்கள், விவேகமுள்ள புத்திமான்கள். பெருஞ்செலவில் மண்டபக் கட்டளை செய்விக்கும் வழக்கமுமிருக்கிறது.

மண்டபக் கட்டளை காலங்களில் மனோல்லாசமாகுமாறு கணிகையர் நடனமே வைத்துக்கொண்டிருப்பாருஞ் சிலருண்டு. இதுவிஷயத்தில் திரவிய விநியோகம் செய்து காலங்கழித்தல் எம்போன்றவருக்குச் சம்மதமாவதில்லை.

போதுமான சாவகாசமாகச் செய்யும் கட்டளை நாட்களில் தீபாராதனை முடிந்தவுடன் நமது சைவமதசம்பந்தமான தேர்ச்சிபெற்றோரையும், தேவார திருவாசக திருப்புகழ்க் கோஷ்டிகளையும் அழைத்துத் திருமுறை ஓதுவித்தல் பிரசங்கஞ் செய்வித்தல் அத்தியாவசியமாகும். உத்ஸவகாலங்களில் தரிசனஞ்செய்ய வந்தவர்கள் தெருக்கூட்டோறுஞ் செய்யும் பிறமத பிரசங்கம், டாக்கீஸ், தெம்மாங்கு, தில்லா, குடை, ருட்ணம் இவைகளைத்தாமா கேட்டுப்பார்த்துச் செல்லுவது? எத்தனையோ சைவக் கவிமணிகள் இத்திவ்விய க்ஷேத்திரத்துக்கு வந்திருக்கிறார்களென்று தெரிந்தும், அவர்களை முன்னுடியே தெரிவித்து, அழைப்பின் பிரசங்கிக்க வாராமல் விடுவார்களா? பற்பல மொழிக்தென்? அறியாநாளெல்லாம் பிறவாநாளாகப் போயின இனி, உத்ஸவகாலங்காளில் பிரசங்கம் திருமுறைப் பாராயணம் செய்வித்தற்குத் தருமகருத்தாக்களும், ஏனையோரும் முயற்சிப்பார்களாக. எல்லாக் கோயில்களும் இவற்றைக் கவனிக்கவும்.

---

## மதிப்புரை

### தருமபுர ஆதீன வெளியீடுகள்.

---

### திருஞானசம்பந்தசுவாமிகள் திருமுலைப்பால் தரிசனப்பேறும், நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த ஆளுடையபிள்ளையார் திருத்தொகையும்

பன்னிரு திருப்பெயர் மன்னிய சீகாழிப் பெரும்பதியில் வருஷந்தோறும் சித்திரைத் திருவாதிரையன்று திருமுலைப்பால் உற்சவம் நடைபெற்றுவருகிறது. இவ் விழாவைத் தரிசிப்போர், இதன் வரலாற்றைத் தெளிவுபெற அறியவேண்டியது ஆவசியகம். ஆதலால், இச் சீகாழித் தேவத்தானத்தின் உரிமை ஆதீனமாகிய திருக்கைலாச

பரம்பரைத் தருமபுர ஆதீனத்து 24-வது பரமாசாரியராய் வீற்றிருக்கும் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிகஞானசம்பந்த மஹாசந்நிதானம் அவர்கள் திருவுளக்குறிப்பின்படி 1939-ம் ஆண்டில் அச்சிடப்பட்டது. இவ்விரண்டாம் பதிப்பில் பதினொராந் திருமுறையின்கண்ணதாகிய ஆளுடையபிள்ளையார் திருத்தொகை என்னும் பிரபந்தமும் சேர்த்து அச்சிடப்பட்டிருக்கிறது.

## ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகையும், ஸ்ரீ சிவஞானதேசிகசுவாமிகள் அருளிய அசபாநடனப் பதிகமும்

ஸ்ரீ சிவஞானதேசிகர் தருமை யாதீனத்து 10-வது பீடாதிபதியாய் அமர்ந்தருளியவர். ஸ்ரீ தியாகேசர் கனவிற் றோன்றிப் பணித்தவாறு ஆங்கு ஆன்மார்த்தபூசையுடன் சென்று இப் பதிகம் பாடப்பட்டது. இத் தியாகேசர் ஆலயத்தில் இவ் வாதீனத்தைச் சேர்ந்த கட்டளையொன்று நடைபெற்றுவருகிறது.

## குங்கிலியக்கலயநாயனுர் அன்பின் திறம்

திருப்பனந்தாள் அருணஜடேசரசுவாமி தேவஸ்தானம் தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது. இந்த ஆதீனத்தின் உச-வது மஹாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக பரமாசாரிய சுவாமிகள் பல திருப்பணிகள் செய்தும் சைவசமயப் பிரசங்கம் செய்வித்தும் வருவதோடு, இத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமான் தாடகையின் அன்பிற்காகக் குனிந்தமையை அன்பு ஒன்றினுலேயே நேரே நிமிரச் செய்த குங்கிலிக்கலயநாயனுர் சரித்திரத்தையும் அச்சிட்டு இலவசமாக வழங்கினுல் யாவரும் அறிந்து பயன் பெறுவாரென்று வெளியிட்டருளினுர்கள். நாயனுர் திருப்பனந்தாளில் எழுந்தருளியிருந்த காலத்தில் நிகழ்ந்ததாகத் தலபுராணம் கூறும் அற்புதங்களும் இறுதியிற் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## வைத்தீசுவரன்கோயில் திருப்பதிகங்கள்

புள்ளிருக்குவேளூர் என்னும் தலம் வைத்தீசுவரன்கோயில் என்று வழங்கப்படும். இத் தலத்தின்மேல் திருஞானசம்பந்தசுவாமிகளும் அப்பர்சுவாமிகளும் திருவாய்மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகங்களையும், அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்களையும், தருமபுர ஆதீனத்துப் பத்தாவது மஹாசந்நிதானம் இயற்றிய முத்துக்குமாரசுவாமி திருவருட்பாவுடன் சேர்த்து, ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக மஹாசந்நிதானத்தின் திருவுளக்குறிப்பின்படி ஷை தேவஸ்தானம் கட்டளை விசாரணை ஸ்ரீ சோமசுந்தரத்தம்பிரான் அவர்களால் வெளியிடப்பட்டிருக்கிறது.